**2nd July 1962]**

*Tubewells*

* 71 *Q.*—SRI A. K. THANGAVEL MUDALIAR : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether there is any proposal to sink tubewells and supply water for irrigation purposes for the 'Manavari' (rainfed) dry lands in Chingleput, North Arcot, Salem and Coimbatore districts; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No Sir.

(*b*) Does not arise.

*Fair price shops*

* 72 *Q.*—SRI J. PONNUSWAMY VILLAVARAYAR : Will the Hon. the Minister for Agriculture be pleased to state whether there is any proposal to supply boiled rice through fair price shops?

THE HON. SRI P. KAKKAN : No, Sir.

**திரு. ஜே. பொன்னுசாமி வில்லவராயர் :** ஐயா, இன்னும் புழுங்கல் அரிசி கொடுக்கப்படவில்லை என்று சொல்லப்படுகிறது.

**கனம் திரு. பி. கக்கன் :** கனம் அங்கத்தினர் புழுங்கல் அரிசி கொடுக்கமுடியுமா என்று முதலில் கேட்டார். இல்லை என்று சொல்லியிருக்கிறேன். ஏற்கனவே மத்திய சர்க்கார் கொடுத்த புழுங்கல் அரிசியைப் பல இடங்களில் கொடுத்தோம். இப்போது மத்திய சர்க்கார் அரிசி கொடுக்க முடியாத காரணத்தால் முடியவில்லை. பின்னால் கிடைத்தால் தரப்படும்.

**திரு. எஸ். கே. சம்பந்தன் :** தமிழ் நாட்டில் புழுங்கல் அரிசி சாப்பிடுபவர்கள் அதிகம் இருப்பதால், புழுங்கல் அரிசியையே உடனடியாகக் கொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா என்பதை அமைச்சர் அவர்கள் சொல்வார்களா?

**கனம் திரு. பி. கக்கன் :** தமிழ்நாட்டு மக்கள் அதிகமாக புழுங்கல் அரிசியைத்தான் சாப்பிடுவார்கள் என்பது தெரியும். அதற்கு எவ்வளவு தூரம் உதவி செய்ய முடியுமோ அதை அரசாங்கம் செய்யும். இப்போது அது கை வசமில்லாததால் கொடுக்க முடியவில்லை.

**திரு. ஏ. கே. தங்கவேல் முதலியார் :** ஐயா, சென்னையில் கடையில் அரிசி களவு போய்விட்டதை கண்டுபிடித்தார்களா ?

**கனம் திரு. பி. கக்கன் :** அரிசி திருட்டுத்தனமாகப் போனதை அரசாங்கம் கண்டுபிடித்துவிட்டது.

**திரு. கே. ராமதாஸ் :** ஐயா, தற்போது நியாயவிலைக் கடைகள் போதுமான அளவு இல்லாததால், அவற்றைப் போதுமான அளவிற்குப் பரப்ப அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?